அவர்கள் வோட்டு அளிக்கலாம். மாறுதல் ஏற்படும் வரை அந்தப் பஞ்சாயத்து யூனியனில் வோட்டு அளிக்கலாம். மாறுதல் செய்வதற்கு இம்மாதிரி ஒரு முறையை (ப்ரொஸீஜர்) அனுசரிக்க வேண்டியிருக்கிறது. இம்முறையை அனுசரித்து மாறுதல் ஏற்பட்டால், எந்தப் பஞ்சாயத்து யூனியனில் சேர்க்கப்பட்டிருக்கிறதோ அந்தப் பஞ்சாயத்து யூனியனில் வோட்டு அளிக்க உரிமை ஏற்படும்.

SRI M. D. THIAGARAJA PILLAI : இதேமாதிரியாக தஞ்சை ஜில்லாவில் குடைவாசல் பஞ்சாயத்தில் ஏற்பட்டு, ஹைகோர்ட்டில் "ரிட்" போட்டு, உடனேயே தேர்தலுக்கு முன்னுலேயே மாற்றப்பட்டிருக்கிறது. அவ்வாறு இந்த பஞ்சாயத்திற்கும் அந்த சந்தர்ப்பத்தை கொடுப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் சொன்ன பிரகாரம் இப்பொழுது எந்த பஞ்சாயத்து யூனியனில் சேர்க்கப்பட்டிருக்கிறதோ, அந்த பஞ்சாயத்து யூனியனில் மாறுதல் ஏற்படும் வரை இந்த பஞ்சாயத்து இருந்தாக வேண்டும். மாறுதல் ஆனதற்கு பிற்பாடு எந்தப் பஞ்சாயத்து யூனியனில் சேர்க்கப்பட்டதோ அந்தப் பஞ்சாயத்து யூனியனில் கலந்துகொள்ள உரிமை ஏற்படும். மாறுதல் செய்வதற்கான விதிகளை அனுசரிக்கவேண்டும் என்று கலெக்டருக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது. விதிகள் பிரகாரம் அவர் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிருர்கள். இதிலே குழப்பத்திற்கு எந்தவிதமான இடமும் இல்லை.

## *District Publicity officers.*

* 1326 Q.—SRI V. SUBBIAH : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) எல்லா மாவட்டங்களிலும் மாவட்ட விளம்பர அதிகாரிகளை நியமிக்கும் உத்தேசம் உண்டா ?

(இ) அப்படியானுல், அது இப்போது எந்த நிலையில் உள்ளது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) & (இ) The matter is under consideration.

SRI V. SUBBIAH : எந்த இலாகாவிலிருந்து இதுவரை விளம்பர அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் ? இனிமேல் நியமிப்பதற்கு எந்த இலாகாவிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுவார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்கு தகுதி உள்ளவர்களை தேர்ந்தெடுப்பதற்கு விதிகள் செய்யப்பட்டிருக்கிறன்றன. விதிப்பிரகாரம் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். விளம்பர இலாகாவிலிருந்தும் எடுக்கலாம்.

SRI M. KALYANASUNDARAM : இவர்கள் என்ன விளம்பரம் செய்கிருர்கள் ? இந்தத் திட்டத்திற்கு ஆண்டுக்கு எவ்வளவு அதிகச் செலவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே, ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றியும் அவர்கள் முக்கியமாக பிரசாரம் செய்கிருர்கள். மக்களிடத்திலே போய்ச் சொல்லி, அவர்கள் அறியும்படிச் செய்து, அவைகளை நிறைவேற்றுவது அவர்கள் கடமை என்பது பற்றியும் பிரசாரம் செய்கிருர்கள். சினிமாப் படங்கள் காட்டியும், புத்தகங்கள் வெளியிட்டும் பிரசாரத்தைச் செய்கிருர்கள். அதிகச் செலவு என்ன என்பது பற்றி புள்ளிவிவரங்கள் இப்பொழுது என்னிடம் இல்லை.

22nd August 1961]

SRI M. K. SOMASUNDARAM : ஸார், இப்பொழுது ஒவ்வொரு ஜில்லாவிலும் பப்ளிசிடி ஆபீசர்கள் இருக்கிறார்களா ? எந்தெந்த ஜில்லாக்களில் இல்லையோ, அங்கெல்லாம் அப்பாயிண்ட்மெண்ட் செய்ய ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆபீசர்கள் இல்லாத ஜில்லாக்களில் நியமிக்க ஏற்பாடு யோசனையில் இருக்கிறது என்று சொன்னேன். இப்பொழுது சில ஜில்லாக்களில் இல்லை. எந்த எந்த ஜில்லாக்களில் இல்லை என்று உடனடியாகச் சொல்வதற்கு என்னிடம் தகவல் இல்லை.

*Tamil Medium in Colleges.*

*1327 Q. —SRI A. VEDARATHNAM கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோவை அரசினர் கல்லூரியில் தமிழ் போதனா மொழியாக செயல்பட்டு வருவதையும், அதன் பலாபலன்களையும் ஆராய கமிட்டி நியமிக்கப்பட்டிருக்கிறதா ?

(இ) அக்கமிட்டி ஆராயப்போகும் விஷயங்களின் விவரமென்ன ?

(உ) இவர்களின் தகுதி யாது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ), (இ) and (உ) A copy of the order [a] on the subject, namely, G.O. Ms. No. 2438, Education, dated 21st November 1960 is placed on the table of the House.

SRI A. VEDARATHNAM : ஸார், இதுவரை அந்தக் கமிட்டி பரிசீலனை செய்து ஏதாவது ஒரு இண்டெரிம் ரிபோர்ட்டாவது அனுப்பியிருக்கிறதா ? அப்படி யென்றால், விவரம் என்ன ? அந்த கமிட்டியில் சேர்க்கப்பட்டிருக்கிற மூன்றாவது அங்கத்தினர், டாக்டர் எஸ். ஏகாம்பரம், ப்ரொபஸர் ஆப் ஸ்டாடிஸ்டிக்ஸ், மைசூர் யூனிவர்சிடி, அவர்களுக்குத் தமிழ் தெரியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : டாக்டர் ஏகாம்பரத்திற்கு தமிழ் நன்றாகத் தெரியும் ; தமிழில் புத்தகங்கள் கூட எழுதி யிருக்கிறார்கள், நான் படித்து இருக்கிறேன். (குறுக்கீடு) ரிபோர்ட்டு இன்னும் கைக்கு வரவில்லை.

SRI K. VINAYAKAM : Sir, I find from the Programme Evaluation Committee that two persons possess Doctorates. Are they Doctors in Tamil or any other subject? If so, from which University they have obtained their Doctorates?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே டாக்டர் கோயில் பிள்ளை, ப்ரொபஸர் ஆப் இங்கிலீஷ். அதனால், அவர் இங்கிலீஷில் Ph. D. டாக்டர் ஆரம் அவர்கள் ப்ரொபஸர் ஆப் ரூரல் இன்ஸ்டிட்யூட் ஆப் ஹையர் எஜுகேஷன். ஆகவே, அவர் எஜுகேஷனில் Ph. D ; டாக்டர் ஏகாம்பரம், ப்ரொபஸர் ஆப் ஸ்டாடிஸ்டிக்ஸ், அவர் ஸ்டாடிஸ்டிக்ஸ் எம்.ஏ. அதில் அவர் டாக்டர் பட்டம் பெற்றவர்.

SRI A. VEDARATHNAM : அடுத்த ஆண்டில் தமிழ் மீடியம் எடுத்துக்கொள்வது பற்றி குறிப்பிடப்பட்டது. அதே கல்லூரியில் எல்லாப் பாடமும் எடுத்துக் கொண்டாகி விட்டதா ? ஏதாவது மாறுதல் உண்டா ? உண்டு என்றால், என்ன விவரங்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படி எடுத்துக் கொள்வதாக இரண்டு மூன்று கல்லூரிகளில் ஏற்பாடு. உடனடியாக எந்தெந்தக் கல்லூரிகள் என்று எடுத்துக்கொள்கிறார்கள் என்று சொல்ல முடியவில்லை.

---

a Printed as Appendix IV on page 613-614 infra.